[4th September 1958

லஞ்ச ஊழலை ஒழிக்க சில மாகாணங்களில் ஜில்லாவாரியாக கமிட்டிகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதேபோன்று இங்கும் ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லாப் பக்கமும் லஞ்சம் பரவலாக இருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்ள தயாராகயில்லை. ஆனால் லஞ்சம் இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்கிறேன். கமிட்டிகள் போட்டு தீர்ப்பதாயிருந்தால் வெகு காலத்திற்கு முன்பே அதை தீர்த்திருக்கலாம். அதிகாரிகள் மட்டுமில்லாது பொது மக்களும் பூர்வமாக ஒத்துழைப்பதின் மூலந்தான் லஞ்ச ஊழலை ஒழிக்க முடியும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : இந்த லஞ்ச ஊழல்கள் ஏற்படுவதற்கான மூல காரணங்கள்தான் என்ன? அவற்றைப் போக்குவதற்கு அரசாங்கம் என்ன தீவிர நடவடிக்கைகள் எடுத்திருக்கின்றன என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்காக 1947-ம் ஆண்டில் பிரதம நீதிபதி ராஜமன்னார் அவர்களின் தலைமையின்கீழ் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு அந்தக் கமிட்டி பல சிபார்சுகளைச் செய்திருக்கிறது. அதன் அடிப்படையில் இப்போது நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. இதில் முக்கியமாக கவனிக்கவேண்டியது: பொது மக்களும் இதில் நல்ல முறையில் ஒத்துழைத்து, அவர்கள் தங்கள் சுயநலத்திற்காக அதிகாரிகளிடம் லஞ்சம் கொடுத்து தங்கள் காரியங்களைச் செய்து கொள்ள முயற்சி செய்யாமல் தங்களுக்கு தாங்களே ஒரு கட்டுப்பாட்டை ஏற்படுத்திக் கொள்வதுடன், லஞ்ச ஊழல்கள் வரும்போது எந்த விதமான பாரபட்சமும் இல்லாமல் அவர்கள் வந்து சாட்சி சொல்ல தயாராயிருக்கவேண்டும். பல சமயங்களில் லஞ்ச ஊழல் புகார்கள் வந்து அவைகள் விசாரிக்கப்படும்போது எந்த விதமான சாட்சியமும் இல்லாமல் அந்த விண்ணப்பங்கள் தள்ளுபடி செய்ய ஏதுவாயிருக்கிறது. பொதுமக்கள் சாட்சியம் சொல்ல முன் வருவதில்லை. ஆகவே, பொதுமக்களின் பூர்ண ஒத்துழைப்பு இருந்தால் இந்த லஞ்ச ஊழலை போக்கமுடியும்.

SRI V. K. KOTHANDARAMAN : லஞ்ச ஊழல்கள் அதிகமாக இருப்பதாக பல சந்தர்ப்பங்களில் அமைச்சர் அவர்களே ஒப்புக்கொண்டிருந்தும்கூட, அதைப் போக்குவதற்கு அரசாங்கம் மட்டிலும் செய்ய முடியாது, பொது மக்களின் ஆதரவும் வேண்டுமென்று கோரக்கூடிய இந்த சமயத்தில் பொது மக்களின் ஆதரவு வேண்டுமென்றிருந்தாலும் அதற்கு வேண்டிய காரியங்களைப்பற்றி பரிசீலனை செய்ய ஜில்லாவிற்கு ஒரு கமிட்டி அல்லது மாகாணத்திற்கு ஒரு கமிட்டி என்று ஏற்படுத்தி பரிசீலனை செய்ய ஒரு கமிட்டி ஏற்படுத்த சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : கமிட்டி ஏற்படுத்துவதினால் எந்தவிதமான பலனும் வந்துவிடாது.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister, Sir, whether our Government have not appointed officers to detect cases of bribery and corruption, and are not in our State already several cases taken up and the offenders booked and convicted?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Hon. Member is correct. We have got a regular machinery for the purpose of finding out corruption and bringing the offenders concerned to book.

## *Seed farms*

* 27 *Q*.—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any proposal to start seed farms in the Ramanathapuram district ; and

(*b*) if so, the number of such farms and their location?

4th September 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) So far 6 (six) farms have been opened in Ramanathapuram district as detailed below :—

| Taluk. (1) | Located at (2) | Number of farms. (3) |
|---|---|---|
| 1 Sattur .. | .. Kilthiruthangal .. .. | 2 |
| | Devadanam .. .. .. | 2 |
| 2 Sivaganga .. | Nattarasankottai .. .. | 2 |
| | Total .. | 6 |

During 1958–59, it is proposed to start 14 (fourteen) farms in Ramanathapuram district. It is not possible at present to say where these will be located.

SRI K. RAMACHANDRAN : விதைப் பண்ணைகள் ஏற்படுத்துவதில் முதலில் நிலங்களை குத்தகைக்கு எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கண்டிஷன் இருப்பதால் நிலச் சொந்தக்காரர்கள் அந்நிலங்கள் பூராவையுமே விலைக்கு விற்று விடுவதாக சொல்கிறார்கள் என்ற காரணத்தினால், அதை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளாததினால் காலதாமதம் ஏற்படுகிறது. ஆகவே அவை பூராவையுமே எடுத்துக்கொள்ள அரசாங்கம் முன்வருமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பூராவையும் விலைக்கு எடுத்துக்கொள்வதற்கு முன்பு குத்தகைக்கு எடுத்துக்கொண்டால் அந்த வருஷத்திற்கு மாத்திரம்தான் "கமிட்மெண்ட்". எப்படி நிலம் உற்பத்தி கொடுக்கிறது என்று பார்த்துத்தான் அவைகளை நிரந்தரமாக விலைக்கு எடுத்துக் கொள்ளவேண்டுமென்ற காரணத்தினால்தான் முதலில் குத்தகைக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த நிலங்கள் குத்தகைக்கு எடுக்கப்பட்ட நிலங்களானால் அதற்கு என்ன குத்தகை கொடுக்கப் படுகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கலெக்டர் அவர்கள் பரிசீலனை செய்து குத்தகை நிர்ணயிக்கிறார்கள்.

SRI M. KALYANASUNDARAM : விதைப் பண்ணைகள் நடத்துவது நிரந்தரமான திட்டமா அல்லது தற்காலிகமான திட்டமா ? நிரந்தர மான திட்டமானால் அந்த நிலத்தை விலைக்கு வாங்குவதற்கு சர்க்கா ருக்கு என்ன ஆட்சேபனையிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ப்ளானிங் கமிஷனின் முடிவுப்படி இது நிரந்தரமான திட்டந்தான். சர்க்காரே உற்பத்தி செய் தால் தான் நல்ல விதைகள் கிடைக்கும் என்பது சர்க்காரின் கருத்து. ஆகவே இப்பொழுது குத்தகைக்கு எடுக்கப்பட்டுள்ள நிலங்களில் எதெது நல்லது, எதை எதை விலைக்கு எடுத்துக்கொள்ளலாம் என்று கவனிக்கப்பட்டு, அவ்வாறு விலைக்கு வாங்கப்பட்டும் வருகிறது. நம் டார்ஜெட்டைக் குறைத்து எவ்வளவு அவசியம் வேண்டும், எந்த நிலங்களை வாங்கலாம் என்றெல்லாம் கவனிக்கப்பட்டு வருகிறது.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister, Sir, what the lands are that are usually taken for starting seed farms and the policy that the Government follow in starting these seed farms?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : We want to secure good seeds of various grains. We want wet lands as well as dry lands—dry lands which would be suitable for various crops.

[4th September 1958

SRI A. GOVINDASAMY : சர்க்கார் பொறுக்குவிதைப் பண்ணைக்கு நிலங்களை குத்தகைக்கு எடுக்கிறபோது பக்கத்தில் இருக்கும் நிலங்களை தாரதம்மியப்படுத்தித்தான் குத்தகை நிர்ணயிக்கிறார்களா ? அல்லது கலெக்டரின் இஷ்டப்படி நிர்ணயிக்கப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கலெக்டரின் இஷ்டப்படி செய்வதல்ல. தரத்தையும் பார்த்துத்தான் செய்யவேண்டும். கலெக்டர் செய்வது தவறாக இருந்தால் அது கவனிக்கப்படும்.

SRI S. M. ANNAMALAI : இந்த விதைப் பண்ணைகளிலிருந்து தயாரிக்கும் விதைகள் (பர்ஸ்ட் க்ளாஸ்படி) ஒரு பவுண்டிற்கு 20 நயா பைசா என்பது மார்க்கட் ரேட்டைவிட சற்று அதிகமாக இருக்கிறது என்று புகார்கள் வந்துள்ளதா ? அப்படியானால் அதைக் குறைக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி புகார்கள் ஒன்றும் வரவில்லை. புகார்கள் வந்தால் அவைகள் கவனிக்கப்படும்.

SRI A. GOVINDASAMY : ராமநாதபுரம் மாவட்டத்தை எடுத்துக் கொண்டால் விதைப் பண்ணைகள் ஏற்படுத்த ஜல வசதியிருக்கிறதா ? அதற்கு வேண்டிய காரியங்களில் இப்பொழுது ஈடுபட்டிருக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதுபற்றிய விவரங்கள் இப்பொழுது என்னிடமில்லை. ஜலவசதியைப் பார்த்துத்தான் இது எடுத்துக் கொள்ளப்படும்.

SRI K. SATTANATHA KARAYALAR : குத்தகைக்கு எடுத்துக்கொள்ளப்படும் நிலங்கள் இன்ன விலையில் இருக்கவேண்டும் அல்லது இன்ன குத்தகைதான் கொடுக்கவேண்டுமென்று ஏதாவது க்ளுப்தப் படுத்தப் பட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதில் சராசரி விலை குறிப்பிடப்பட்டிருக்கிறது. எல்லாவற்றையும் கணக்கிட்டுப் பார்த்து சராசரி விலைக்கு மேல் போகக்கூடாது என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

SRI M. P. SUBRAMANIAM : சர்க்கார் நடத்தும் விதைப் பண்ணைகள் பெரும்பாலும் நஷ்டத்தில் வேலை செய்கிறது என்று தெரியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எத்தனை பண்ணைகள் என்று நினைவில்லை, சில பண்ணைகள் நஷ்டத்தில் வேலை செய்து வருகிறது இதுவரையில். ஆனால் முதல் வருஷத்தை விட இரண்டாவது வருடத்தில் அதில் அபிவிருத்தி காணப்படுகிறது. விதைப் பண்ணைகள், சாதாரண பயிர் போடுவதுபோல் அல்ல. அதில் கொஞ்சம் செலவாகிறது. இருந்தாலும் இப்பொழுது இதை எஸ்டிமேட்ஸ் கமிட்டி பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள். இப்பொழுதே அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது. எஸ்டிமேட்ஸ் கமிட்டி ரிப்போர்ட் வந்த பிறகு மேலும் கவனம் செலுத்தப்படும்.

### *Socialistic Pattern of Society*

* 28 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

பொருளாதாரத் துறையில் ஏற்றத்தாழ்வற்ற சமத்துவ சமுதாயத்தை நிறுவ சர்க்கார் முயற்சிக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir. That has been and is the endeavour of the Government.

SRI N. R. THIAGARAJAN : இந்த முயற்சிகளில் எவை எவை வெற்றி பெற்றிருக்கின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதை கேள்வி நேரத்தில் சொல்லமுடியாது. பட்ஜெட் விவாதத்தின்போது கேட்டால் சொல்லுகிறேன்.